உ
சிவமயம்

# திருவாசகம்

## சில பகுதியும்
## பிற தோத்திரங்களும்



நான்காம் பதிப்பு

இது கோவிலூர் ஆதீனத்தில் எழுந்தருளியிருக்கும்
மகாசன்னிதானங்கள் ஸ்ரீலஸ்ரீ
**சோமசுந்தர ஞான தேசிக சுவாமிகள்**
அவர்களால்

காரைக்குடி சௌத் இந்தியா அச்சகத்தில்
பதிப்பிக்கப் பெற்றது
1970

உ
சிவமயம்

## நான்காம் பதிப்பின் முகவுரை

கோவிலூர்மடத்திற்சேரும் மாணவர்களுக்குக்கட்டளை முதல் வாசிட்டம் ஈருயுள்ள பதினாறு வேதாந்த சாஸ்திரங்களைக் கற்பதற்கு முன் கற்கவேண்டிய சில சிறு நூல்களில் "திருவாசகமும் சில பகுதியும் பிற தோத்திரங்களும்" என்னும் இந்நூல் முக்கியமானது. இது, மூன்று பதிப்புகளாகி இப்போது நூலின்றியிருக்க, அக்குறையைப் போக்கக் கருதிய ஷை கோவிலூர் ஆதீனத்தில் எட்டாவதுகுருமூர்த்திகளாக எழுந்தருளியுள்ள ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஞானதேசிக சுவாமிகள் அவர்கள் கருணைகூர்ந்து நான்காம் பதிப்பாக வெளியிட்டுள்ளார்கள். இதில் புதிதாகப்பந்திப் பாட்டென்னுந் தலைப்பில் ஐந்துபழம்பாடல்களும் வேறுசில்பாக்களும் சேர்க்கப்பட்டுள்ளன. அதாவது "சற்குருஸ்துதிகள்" என்ற தலையங்கத்தில் "உத்தமகைலை" என்றசெய்யுள், காரியனூர் ஸ்ரீநடேச ஞானதேசிக சுவாமிகள் அவர்களாலும், "திருவருள் பெருகும்" "காசாசை முதன்மூன்றும்" 'கங்கையுமம்' என்ற தலைப்புடைய செய்யுட்கள் மகா. சோமசுந்தர ஐயா அவர்களாலும் "அன்னவன் கீதையாலே" வந்துறு சீடர்க்கெல்லாம் என்ற தலைப்புடைய செய்யுட்கள் இலக்கணம் இராமசாமி அவர்களாலும் இயற்றப் பெற்றுள்ளன. இந்நூல் வெளிவர உதவிய அனைவருக்கும் நன்றி உரித்தாகுக.

**கோவிலூர்மடம்.**
**1 – 1 – 1970**

**சோம. கோபால் ஐயா.**

காரைக்குடி—கோவிலூர்மடம் மாணவர்களுள் ஒருவராகிய

## மகா. சோமசுந்தர ஐயா அவர்கள்

**இயற்றிய சாத்துக்கவி**

கட்டளைக் கலித்துறை

திருவாச கத்துட் சிலபாட லுஞ்சிலர் செய்யுளுஞ்சேர்த்
தொருவா தமைத்தொரு நூலாக்கி னன்கோவிலூர்மடத்துள்
வருவார் முதற்கட் பயிலும் படிக்கம் மடத்தினெட்டாங்
குருவா யொளிர்சோம சுந்தர ஞான குணாகரனே.

# ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் சரித்திரச் சுருக்கம்.

நீர்வளமும், நிலவளமும் சிறப்புற்றோங்கி யிலகும் செந்தமிழ்ப் பாண்டிவள நாட்டில் திருவாதவூர் எனுந் தலத்தில், அமாத்திய ரென்னும் அந்தணர் குலத்தில், சம்புபாதாசிருதருக்கும், சிவஞானவதி யெனும் அம்மையாருக்கும், புத்திரராயவதரித்து வாதவூரரென்னும் பிள்ளைத் திருநாமம்பெற்றுப் பதினறு பிராயத்துள்ளே வேதசிவாகம முதலிய கலைகள் முற்றுங் கற்று வல்லவரானர். அவ்வாதவூரருடைய நற்குண நற்செய்கைகளனைத்தும் மதுரையில் அரசாட்சிசெய்த அரிமர்த்தன பாண்டியன் செவிக்குப் புலப்பட்டன. புலப்பட்டவுடனே வாதவூரரை வருவித்து ஆராய்ந்து மிக வியந்து கொண்டாடி "**தென்னவன் பிரமராயன்**" என்னும் பெயருங் கொடுத்துத் தன்னிடத்தே முதன் மந்திரியாகச் செய்தான். அவ்வாதவூரரும் அரசனுக்கு இனியராய் வாழ்ந்திருக்கும் போழ்து பூர்வபுண்ணிய விசேடத்தால் மனந்தூயராய் பிறவிக்கஞ்சி விடுபேற்றின் அவா மிக்குடையராய்த் தத்துவ ஞானத்தை உபதேசிக்கத் தக்க ஞானசாரியரைக் காணுதற்கு அவா மிக்குடையராயிருந்தனர்.

அங்ஙனமிருக்கும்போது அரசன் கீழ்கடற்றுறையிலே சென்று குதிரைகள் வாங்கிவரும்படி ஏவினன். ஏவப்பட்ட மந்திரியார் அளவிறந்த திரவியத்தைக் கைக்கொண்டு சென்று, மார்க்கத்தின் மத்தியிலுள்ள திருப்பெருந்துறை யென்னுஞ் சிவக்ஷேத்திரத்தைச் சமீபித்தனர்; சமீபிக்குங்கால் பரமபதியாகிய சிவபிரான் வாதவூரரது அதிதீவிரதர பக்குவத்தை நோக்கி அவருக் கநுக்கிரகிக்கும் பொருட்டுத் திருப்பெருந்துறைச் சிவாலயத்தில் குருந்தமர நீழலில் தமது கணநாயகர்கள் மாணக்கராய்ச் சூழத் தாம் ஒரு ஆசாரியராகத் திருவுருக்கொண்டு வீற்றிருந்தருளினர்.

பின்பு, வாதவூரரும் ஆலயஞ்சேர்ந்து குருமூர்த்தியைத் தரிசித்தவளவில் அழலிடைப்பட்ட மெழுகெனவுருகி அழுத கண்ணுந் தொழுத கையுமுடையராய் திருவடிக்கமலங்களிலே வீழ்ந்து, தேவரீர் அடியேனுக்கு அநுக்கிரகிக்க வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தனர். வாதவூரரது அதிதீவிரதர பக்குவத்தைக் கண்ட தேசிகோத்தமர் திருவருள் சுரந்து ஸ்ரீமுத்தி பஞ்சாக்கரத்தை யுபதேசித்துத் திருவடி சூட்டி யருளினார். அவ்வுபதேசப் பொருளைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நிஷ்டையில் அமர்ந்து அநுபவானந்த மேலீட்டினால் குருமூர்த்தங் கொண்டருளிய பரமசிவனது பாதாரவிந்தங்களிலே பாமாலை சூட்டத் தொடங்கினார். அப்பாடல்களைக் கேட்டருளிய சிவபிரான் திருவுளங் களிகூர்ந்து உயர்ந்த மாணிக்கங்கள்போல அப்பாடல்களில் வாசகங்கள் அமைந்திருந்தமை நோக்கி அவ்வாதவூரடிகட்கு "மாணிக்கவாசகர்" என்று திருநாமங் கொடுத்து அங்கே அமர்ந்திருக்கும்படி கட்டளையிட்டு மறைந்தருளினார். பின்பு மாணிக்கவாசகப் பெருமான் குதிரைகொள்ளக் கொண்டுவந்த தனங்களையெல்லாம் சிவகாரியார்த்தமாக உபயோகப்படுத்திவிட்டு நிட்டையிலமர்ந்தருளுங்கால் "இதுகாறும் குதிரைகள் வாங்கிவராமைக்குக் காரணம் என்னை?" என்று அரசனிடத்திலிருந்து நிருபம் வந்ததைப்பார்த்து ஆலயத்திற் சென்று சிவசந்நிதானத்தில் விண்ணப்பஞ் செய்தபொழுது சிவபிரான் குருமூர்த்தமாயெழுந்தருளி "நாம் பரிகொண்டு வருகின்றோம் நீ செல்" என்று திருவாய் மலர்ந்தருள, உடனே வாதவூரரும் மதுரையம்பதி சேர்ந்து அரசனைக்கண்டு ஆவணி மூலத்தில் குதிரைகள் வந்துவிடும் என்று வரையறை கூறினார். அங்ஙனம் வரையறை செய்த நாள்காறும் பரிகள் வாராமைகண்டு வாதவூரரை ஹிம்சிக்க அவ்வருத்தம் பொறுது சிவபிரானை நோக்கி முறையிடும்பொழுது சிவபிரான் வனத்திலுள்ள நரிகளைப் பரிகளாக்கிக்கொண்டு வந்து காட்டி அரசனை மகிழ்வித்துத் தந்தொண்டரை விடுவித்தனர். பின்பு அன்றிரவிலேயே அப்பரிகளனைத்தும் நரிகளாகி முன்னுள்ள பரிகளுக்கும் ஊறு செய்து நகர

மெங்கும் கலங்கச் செய்து வனத்தை யடைந்தன. விடிந்த வுடன் நிகழ்ந்த செய்தி கேட்ட அரசன் வாதவூரரை ஹிம்சிக்கச் சிவபிரான் வைகை நதியை மதுரை நகர்மீது பெருகி வரும்படி செய்து அவ்வரசனுக்கு வாதவூரரது மகிமையைக் காட்டியருளினர். பின்பு வாதவூரர், அரசனையுந் துறந்து சிவஸ்தலங்கள் தோறும் பணிந்து பாடி ஸ்ரீ சிதம்பர க்ஷேத்திரத்தை அடைந்து, திருநடராஜரைத் தொழுது பாடி அத்தில்லை யெல்லைக்கு மேலைத் திசையிலுள்ள தபோவனத்தில் நிட்டையிலமர்ந்தருளினுர். அதன்பின் ஸ்ரீ நடராஜர் ஆஞ்ஞைப்படி புத்தரை வாதிலேவென்று ஒருமைப் பெண்ணைப் பேசுவித்து, அங்கே அமரும்போது சிவபிரான் அந்தணராகத் தோன்றி அதுவரையும் பாடிய வைகளைத் தொகுத்துப் பாடும்படி கேட்டு, அதிகாரவரை செய்து திருவாசகத் திருமுறையாகவும், திருக்கோவையார் பாடச்சொல்லிக் கேட்டு அதனை அதன் பின்னுகவும், தமது அருமைத் திருக்கரத்தால் வரைந்தருளி "இங்ஙனம் மாணிக்கவாசகன் சொல்லியபடி அழகிய திருச்சிற்றம்பலமுடையார் எழுதியது" என்று திருக்கைச் சாத்துமிட்டு அந்தர்த்தானமாயினுர். பின்பு அகண்டாகார நித்திய வியாபக சச்சிதானந்தப் பிழம்பாகிய ஸ்ரீ நடராஜர் திருவடி நீழலிலே மாணிக்கவாசக ஸ்வாமிகள் இரண்டறக் கலந்தனர். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர் திருநாவுக்கரசு நாயனுர். சுந்தரமூர்த்தி நாயனுர் ஆகிய மூவர்களுடன் மாணிக்கவாசக ஸ்வாமிகளையுஞ் சேர்த்து சமயாசாரியார் நால்வராக யாவராலுங் கொண்டாடப் படுகின்றனர். மாணிக்கவாசக ஸ்வாமிகளுக்கு சிவக்ஷேத்திரங்கடோறும் மார்கழி, ஆனி மாதங்களில் திருவிழாவும் நடத்தப்படுகின்றது.

**மாணிக்கவாசக ஸ்வாமிகள் சரித்திரம் முற்றிற்று**

---

உ

சிவமயம்

ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# தமிழ் வேதமாகிய

# திருவாசகம்.

## நூற்சிறப்பு.

### நேரிசை வெண்பா.

திருச்சிற்றம்பலம்.

தொல்லை யிரும்பிறவிச் சூழுந் தளைநீக்கி
அல்லலறுத் தானந்த மாக்கியதே—யெல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூ ரெங்கோன்
திருவா சகமென்னுந் தேன்.

சிவமயம்

# சிவபுராணம்

## சிவனதநாதி முறைமையான பழமை

திருப்பெருந்துறையி லருளிச்செய்யப்பெற்றது

### கலிவெண்பா.

திருச்சிற்றம்பலம்.

நமச்சிவாய வாஅழ்க நாதன்றாள் வாழ்க
இமைப்பொழுது மென்னெஞ்சில் நீங்காதான் றாள்வாழ்க
கோகழி யாண்ட குருமணிதன் றாள்வாழ்க
ஆகம மாகிநின் றண்ணிப்பான் றாள்வாழ்க
ஏகன் அநேகன் இறைவ னடிவாழ்க
வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவா ருண்மகிழும் கோன்கழல்கள் வெல்க
சிரங்குவிவா ரோங்குவிக்குஞ் சீரோன் கழல்வெல்க
ஈச னடிபோற்றி யெந்தை யடிபோற்றி
தேசனடி போற்றி சிவன்சே வடிபோற்றி
நேயத்தே நின்ற நிமல னடிபோற்றி
மாயப் பிறப்பறுக்கும் மன்ன னடிபோற்றி
சீரார் பெருந்துறைநந் தேவ னடிபோற்றி
ஆராத வின்ப மருளு மலைபோற்றி
சிவனவனென் சிந்தையுள் நின்ற வதனால்
அவனரு ளாலே அவன்றாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
முந்தை வினைமுழுதும் ஓய வுரைப்பனியான்

கண்ணுதலான் றன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற் கெட்டா எழிலார் கழலிறைஞ்சி
விண்ணிறைந்துமண்ணிறைந்துமிக்காய்விளங்கொளியாய்
எண்ணிறந் தெல்லை யிலாதானே நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன்
புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தே னெம்பெருமான்
மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்
உய்யவென் னுள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா வெனவோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே
வெய்யாய் தனியாய் இயமான னாம்விமலா
பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞான மில்லாதே னின்பப் பெருமானே
அஞ்ஞானந் தன்னை அகல்விக்கு நல்லறிவே
ஆக்க மளவிறுதி யில்லா யனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பா யருள்தருவாய்
போக்குவா யென்னைப் புகுவிப்பாய் நின்றொழும்பி
னாற்றத்தி னேரியாய் சேயாய் நணியானே
மாற்ற மனங்கழிய நின்ற மறையோனே
கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கு மெங்கள் பெருமான்
நிறங்களோ ரைந்துடையாய் விண்ணோர்க ளேத்த
மறைந்திருந்தா யெம்பெருமான் வல்வினையேன் றன்னை
மறைந்திட மூடிய மாய விருளை
அறம்பாவ மென்னும் அருங்கயிற்றாற் கட்டிப்
புறந்தோல்போர்த் தெங்கும் புழுவழுக்கு மூடி

மலஞ்சோரு மொன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால் விமலா வுனக்குக்
கலந்தவன் பாகிக் கசிந்துள் ளுருகும்
நலந்தா னிலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காஅட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த வடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனார் அமுதே சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கு மாரியனே
நேச வருள்புரிந்து நெஞ்சில்வஞ் சங்கெடப்
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
ஆரா வமுதே அளவிலாப் பெம்மானே
ஓராதா ருள்ளத் தொளிக்கு மொளியானே
நீரா யுருக்கியென் ஆருயிராய் நின்றானே
இன்பமுந் துன்பமும் இல்லானே யுள்ளானே
அன்பருக் கன்பனே யாவையுமா யல்லையுமாஞ்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே
ஆதியனே யந்த நடுவாகி யல்லானே
ஈர்த்தென்னை யாட்கொண்ட எந்தை பெருமானே
கூர்த்தமெய்ஞ் ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தி
னோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே
காக்குமெங் காவலனே காண்பரிய பேரொளியே
ஆற்றின்ப வெள்ளமே அத்தாமிக் காய்நின்ற
தோற்றச்சுட ரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாந்
தேற்றனே தேற்றத் தெளிவேயென் சிந்தனையுள்
ஊற்றான வுண்ணா ரமுதே யுடையானே
வேற்று விகார விடக்குடம்பி னுட்கிடப்ப
ஆற்றேனெம் மையா அரனேயோ வென்றென்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்

மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பை கட்டழிக்க வல்லானே
நள்ளிருளி னட்டம் பயின்றாடு நாதனே
தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே
அல்லற் பிறவி யறுப்பானே யோவென்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவனடிக்கீழ்ப்

விண்ணப்பம்

பல்லோரு மேத்தப் பணிந்து.

திருச்சிற்றம்பலம்

# கோயின் மூத்த திருப்பதிகம்.

## அநாதியாகிய சற்காரியம்.

### தில்லையில் அருளிச்செய்யப்பெற்றது.

—::—

### ஆசிரிய விருத்தம்

**திருச்சிற்றம்பலம்.**

உடையா ளுன்ற னடுவிருக்கும் உடையாள் நடுவுள்
நீயிருத்தி, அடியேன் நடுவு ளிருவீரும் இருப்பதானா
லடியேனுன், அடியார் நடுவு ளிருக்குமரு ளைப்புரி
யாய்பொன் னம்பலத்தெம், முடியா முதலே யென்
கருத்து முடியும் வண்ண முன்னின்றே. (1)

முன்னின் றாண்டா யெனைமுன்னம் யானு மதுவே முயல்
வுற்றுப், பின்னின் றேவல் செய்கின்றேன் பிற்பட் டொழிந்
தேன் பெம்மானே, என்னின் றருளி வரநின்று போந்தி
டென்னு விடிலடியார், உன்னின் றிவனு ரென்னாரோ
பொன்னம் பலக்கூத் துகந்தானே. (2)

உகந்தா னேயன் புடையடிமைக் குருகா வுள்ளத் துணர்
விலியேன், சகந்தா னறிய முறையிட்டால் தக்க வாறன்
றென்னாரோ, மகந்தான் செய்து வழிவந்தார் வாழ
வாழ்ந்தா யடியேற்குன், முகந்தான் றாரா விடின்முடிவேன்
பொன்னம் பலத்தெம் முழுமுதலே. (3)

முழுமு தலேயைம் புலனுக்கும் மூவர்க்கு மென்றனக்கும்,
வழிமு தலேநின் பழவடி யார்திரள் வான்குழுமிக், கெழுமுத
லேயருள் தந்திருக்க இரங்குங் கொல்லோவென், றழுமது
வேயன்றி மற்றென் செய்கேன் பொன்னம் பலத்தரைசே. (4)

அரைசே பொன்னம் பலத்தாடும்அமுதே யென்றுன் னருள் நோக்கி, இரைதேர் கொக்கொத் திரவுபக லேசற் றிருந்தே வேசற்றேன், கரைசே ரடியார் களிசிறப்பக் காட்சி கொடுத்துன் னடியேன்பாற், பிரைசேர் பாலின் நெய் போலப் பேசா திருந்தா லேசாரோ. (5)

ஏசா நிற்பர் என்னையுனக் கடியா னென்று பிறரெல்லாம் பேசா நிற்பர் யான்றுனும் பேணு நிற்பே னின்னருளே தேசா நேசர் சூழ்ந்திருக்குந் திருவோ லக்கஞ் சேவிக்க ஈசா பொன்னம் பலத்தாடும் எந்தா யினித்தா னிரங்காயே. (6)

இரங்கு நமக்கம் பலக்கூத்த னென்றென் றேமாந் திருப்பேனை, அருங்கற் பனைகற் பித்தாண்டாய் ஆள்வா ரிலிமா டாவேனோ, நெருங்கு மடியார் களுநீயும் நின்று நிலாவி விளையாடும், மருங்கே சார்ந்து வரவெங்கள் வாழ்வே வாவென் றருளாயே. (7)

அருளா தொழிந்தால் அடியேனை அஞ்சே லென்பா ராரிங்குப், பொருளா வென்னைப் புகுந்தாண்ட பொன்னே பொன்னம் பலக்கூத்தா, மருளார் மனத்தோ டுனைப் பிரிந்து வருந்து வேனை வாவென்றுன், தெருளார் கூட்டங் காட்டாயேற் செத்தே போனாற் சிரியாரோ. (8)

சிரிப்பார் களிப்பார் தேனிப்பார் திரண்டு திரண்டுன் திருவார்த்தை, விரிப்பார் கேட்பார் மெச்சுவார் வெவ்வே றிருந்துன் திருநாமந், தரிப்பார் பொன்னம் பலத்தாடுந் தலைவா என்பா ரவர்முன்னே, நரிப்பாய் நாயேன் இருப்பேனோ நம்பி யினித்தா னல்காயே. (9)

நல்கா தொழியான் நமக்கென்றுன் னுமம் பிதற்றி நயன நீர், மல்கா வாழ்த்தா வாய்குழறு வணங்கா மனத்தால் நினைந்துருகிப், பல்கால் உன்னைப் பாவித்துப் பரவிப் பொன்னம் பலமென்றே, ஓல்கா நிற்கும் உயிர்க்கிரங்கி யருளா யென்னை யுடையானே. (10)

திருச்சிற்றம்பலம்.

# யாத்திரைப் பத்து

## அனுபவாதீத முரைத்தல்.

## தில்லையிலருளிச்செய்யப்பெற்றது.

### ஆசிரிய விருத்தம்

**திருச்சிற்றம்பலம்.**

பூவார் சென்னி மன்னனெம் புயங்கப் பெருமான் சிறி யோமை, ஓவா துள்ளங் கலந்துணர்வாய் உருக்கும் வெள்ளக் கருணையினல், ஆவா என்னப் பட்டன்பா யாட் பட் டீர்வந் தொருப்படுமின், போவோங் காலம் வந்தது காண் பொய்விட் டுடையான் கழல்புகவே. (1)

புகவே வேண்டா புலன்களினீர் புயங்கப் பெருமான் பூங்கழல்கள், மிகவே நினைமின் மிக்கவெல்லாம் வேண்டா போக விடுமின்கள், நகவே ஞாலத் துள் புகுந்து நாயே யனைய நமையாண்ட, தகவே யுடையான் தனைச் சாரத் தளரா திருப்பார் தாந்தாமே. (2)

தாமே தமக்குச் சுற்றமுந் தாமே தமக்கு விதிவகையும், யாமா ரெமதார் பாசமார் என்ன மாயம் இவைபோகக், கோமான் பண்டைத் தொண்டரொடும் அவன்றன் குறிப்பே குறிக்கொண்டு, போமா றமையின் பொய்நீக்கிப் புயங்க னுள்வான் பொன்னடிக்கே. (3)

அடியா ரானீர் எல்லீரும் அகல விடுமின் விளையாட்டைக் கடிசே ரடியே வந்தடைந்து கடைக்கொண் டிருமின் திருக்குறிப்பைச், செடிசே ருடலைச் செலநீக்கிச் சிவலோ கத்தே நமைவைப்பான், பொடிசேர் மேனிப் புயங்கன்றன் பூவார் கழற்கே புகவிடுமே. (4)

விடுமின் வெகுளி வேட்கைநோய் மிகவோர் காலம் இனியில்லை, உடையா னடிக்கீழ்ப் பெருஞ்சாத்தோ டுடன்போ வதற்கே யொருப்படுமின், அடைவோம் நாம்போய்ச் சிவபுரத்துள் அணியார் கதவ தடையாமே, புடைபட் டுருகிப் போற்றுவோம் புயங்க னாள்வான் புகழ்களையே. (5)

புகழ்மின் தொழுமின் பூப்புனைமின் புயங்கன் றாளே புந்தி வைத்திட், டிகழ்மின் எல்லா அல்லலையும் இனியோ ரிடையூ றடையாமே, திகழுஞ் சீரார் சிவபுரத்துச் சென்று சிவன்றாள் வணங்கிநாம், நிகழும் அடியார் முன்சென்று நெஞ்ச முருகி நிற்போமே. (6)

நிற்பார் நிற்கநில் லாவுலகி னில்லோம் இனிநாஞ் செல்வோமே, பொற்பா லொப்பாந் திருமேனிப் புயங்க னாள்வான் பொன்னடிக்கே, நிற்பீர் எல்லாந் தாழாதே நிற்கும் பரிசே யொருப்படுமின், பிற்பால் நின்று பேழ்கணித்தாற் பெறுதற் கரியன் பெருமானே. (7)

பெருமான் பேரா னந்தத்துப் பிரியாதிருக்கப் பெற்றீர்காள், அருமா லுற்றுப் பின்னைநீர் அம்மா வழுங்கி யரற்றாதே. திருமா மணிசேர் திருக்கதவந் திறந்த போதே சிவபுரத்துத், திருமா லறியாத் திருப்புயங்கன் திருத்தாள் சென்று சேர்வோமே. (8)

சேரக் கருதிச் சிந்தனையைத் திருந்த வைத்துச் சிந்திமின், போரிற் பொலியும் வேற்கண்ணாள் பங்கன் புயங்கன் அருளமுதம், ஆரப் பருகி யாராத ஆர்வங் கூர அழுந்துவீர், போரப் புரிமின் சிவன்கழற்கே பொய்யிற் கிடந்து புரளாதே. (9)

புரள்வார் தொழுவார் புகழ்வாராய் இன்றே வந்தா ளாகாதீர், மருள்வீர் பின்னை மதிப்பாரார் மதியுட் கலங்கி மயங்குவீர், தெருள்வீ ராகில் இதுசெய்மின் சிவலோ கக்கோன் திருப்புயங்கன், அருளார் பெறுவா ரகலிடத்தே அந்தோ அந்தோ அந்தோவே. (10)

திருச்சிற்றம்பலம்

# நடராஜர் துதிகள்.

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம் (1)

ஆதியாய் நடுவு மாகி அளவிலா வளவு மாகிச்
சோதியா யுணர்வு மாகித் தோன்றிய பொருளு மாகிப்
பேதியா வேக மாகிப் பெண்ணுமா யாணுமாகிப்
போதியா நிற்குந் தில்லைப் பொதுநடம் போற்றிபோற்றி.

கற்பனை கடந்த சோதி கருணையே யுருவ மாகி
அற்புதக் கோல நீடி யருமறைச் சிரத்தின் மேலாஞ்
சிற்பர வியோம மாகுந் திருச்சிற்றம் பலத்து ணின்று
பொற்புட னடஞ்செய் கின்ற பூங்கழல் போற்றி போற்றி. (3)

திங்களார் சடையிற் கங்கைநீர் துளிப்பத்
திருந்திழை யுமையுளங் களிப்பப்,
பொங்கரா வொடுநற் புலிமுனி வர்கள் மால்
போதய னமரர்கள் போற்றத்,
துங்கநான் மறைகள் துதித்திட ஐந்து
தொழில்விரிந் திடப்பொது வதனிற்,
செங்கழ லதிர நடஞ்செயும் பொருளைத்
தினம்பணிந் திடரொழித் திடுவாம். (4)

காரண மானதன் கலையி னோர்கலை
தாரணி தனிலுறுந் தலங்கள் மேவிவந்
தாரண வுரைப்படி யடங்கு மம்பலப்
பூரண நடேசனைப் போற்றல் செய்குவாம். (5)

குன்றி டாத கொழுஞ்சுட ரேமணி
மன்றுளாடிய மாணிக்க மேயுனை
யன்றி யார்துணை யாருற வார்கதி
யென்று நீயெனக் கின்னருள் செய்வதே. (6)

அம்பிகா சகித னுகி யாநந்த நடனஞ் செய்து
நம்பினேர் துன்ப நீக்கி நற்சுக நல்கா நின்ற
எம்பிதா வான ஈசன் இருபதக் கமலந் தன்னை
நம்புவாம் துன்ப நீங்கி நற்சுக மடைவ தற்கே (7)

சீராருஞ் சதுர்மறையுந் தில்லைவா ழந்தணரும்
பாராரும் புலிமுனியும் பதஞ்சலியுந் தொழுதேத்த
வாராருங் கடல்புடைசூழ் வையமெலா மீடேற
ஏராரு மணிமன்றுள் எடுத்ததிரு வடிபோற்றி (8)

பராபர முதலே போற்றி பத்தியில் விளைவாய் போற்றி
சராசர மாகி வேருய் நின்றதற் பரனே போற்றி
கராசல வுரியாய் போற்றி கனகவம் பலத்து ளாடும்
நிராமய பரமானந்த நிருத்தனே போற்றி போற்றி. (9)

அனகநிர வயவபர அமலவுணர் வுறவே
உனவரிய பகுதியறி னுருமுழுது மறவே
மனநிறைய வமுதசுக மகிழ்வுதரு மொளிசேர்
கனகசபை நடனமிடு கடவுளடி பணிவாம். (10)

---

வானவ ரசமாந் தொடர்பிற லுலகோர்
வழுத்துறும் வன்னியைங் கரனை
வானவ ரதன மணியறு முகனை
மாசறு கொற்றவா ளிறையை
வானவர் முதுவன் பாலன வலவன்
வணங்குநற் றிருநெலை மாதை
வானவ ரதனு முத்திரா மேச
வள்ளலை வணங்கி வாழ்த்திடுவாம்.

# சற்குரு ஸ்துதிகள்

தந்தைதா யாவானுஞ் சார்கதியிங் காவானும்
அந்தமிலா இன்பநமக் காவானும்—எந்தமுயிர்
தானகு வானுஞ் சரணகு வானுமருட்
கோனகு வானுங் குரு. (1)

வேத நான்கினுட் பொருளினை மறைத்தவெந் தமக்குப்
போத பானுவாய்ப் புனிதநல் லருளுருப் புனைந்து
சேது வாம்பர சுகத்தினைத் திகழ்தர விளக்கும்
வாத ராயணன் மலரடி முடிமிசை வைப்பாம். (2)

பொங்கருள் ஞான நங்கள் புண்ணிய மனைத்து மொன்ருய்,
அங்குபுல் லென்ன வந்தாண் டருமறைப் பொருளை
யார்க்கும், அங்கையி னெல்லி போல அளித்தரு ளமலா
நந்த, சங்கர பகவற் பாதன் ருண்மலர் நந்த லைக்கே. (3)

உத்தம கைலை மலைக்கிறை யவன ருமையொரு பாகமே
முதலாம், மெத்திய வடிவை மறைத்துல குணர்வு மேவமா
னுடவுருப் புனைந்தே, சத்திய தவத்தோர் சார்ந்திடுஞ்
சிருங்கை தனில்வள ரபிநவ பதஞ்சேர், சுத்தமெய்ஞ் ஞான
வித்தியா தீர்த்த தூயமா தவன்பதந் தொழுவாம். (4)

பிள்ளைகள் நூறு பிழைகள்செய் தாலும் பெற்றவர்
தனயரை முனிந்து, தள்ளுதல் உலகி லுண்டுகொல்
லடியேன் தவறினைப் பொறுத்தருள் புரிவாய், எள்ளுறு
மிடமும் பிரிவிலாப் பொருளே யெந்தையே யென்னுயிர்த்
துணையே, உள்ளுதற் கரிய பொருள்வைமா நகர்வாழ்
உகந்ததே சிகசிகா மணியே. (5)

ஏமநற் கிரியை வலஞ்செயுங் கதிரோன் எழுவதன்
முன்னமே யெழுந்து, சேமநீர் படிந்து செபித்துனைப்
பரவுஞ் செனனமே யெனக்குநீ தருவாய், காமனை
யெரித்துக் காலனை யுதைத்துக் கஞ்சனற் சிரநகத் தரிந்த
ஓமெனும் பொருளே பொருள்வைமா நகர்வாழ் உகந்ததே
சிகசிகா மணியே. (6)

சித்தரும் பரவா நின்ற சீர்மிகுங் கழனி தன்னிற்
பித்தனு மெனேயு மாளப் பேரரு ளுருவா யுற்ற
முத்தரு முத்தி ராம முதல்வனற் கமல பாதம்
நித்தமுந்தொழுதுவாழ்த்திநெஞ்சினிலிருத்தல்செய்வாம். (7

உகந்த தேசிகன் ஒண்டனிப் பதத்தையிவ் வுலகை
இகந்த முத்திரா மப்பெய ரிறைமல ரடியைச்
செகந்த் ருதெனுஞ் சிதம்பர தேவனற் ருனே
அகந்தை தீரஎம் மகத்தினுஞ் சிரத்தினு மணிவாம். (8)

திருவருள் பெருகுங் கோவிலூர் மடத்தில்
திகழ்கரு ணைநிதி யென்னுங்
குருவரன் ஞான சிதம்பர மூர்த்தி
குளிர்கிரு பைக்கிட மானேன்
அருவென விளங்கு மொருபரம் பொருளில்
அழுந்திய நிட்டையை யுடையோன்
தருவரன் நான்காங் குருவெனும் இராம
சாமிதே சிகனடி சார்வாம் 9

முத்தியையீயு முத்திராமேச முனிவர்கள் தொழுமுனிவரனை
நித்தியஅருணசலமுனிவரனை நிகரறுங்கருணைமா நிதியைச்
சத்திய ஞான சுகவடி வான சற்குரு வீரமா தவனை
நித்தமும் பாடி நைந்துநைந் துருகி நிரந்தரம் பணிந்திட
ரொழிப்பாம். (10)

* அன்னவன் கீதையாலே யறைந்திடும் பொருட்கு மாறாய்
மன்னிய மதங்களென்ற மாமத யானை கட்கு
உன்னத சிங்கம் போல உறைந்தநல் ஞான யோகி
அன்னவ னாரும் பட்டம் அண்ணாமலை ஞான குரவன் (11)

---

* அன்னவாகனனைபிரமன்

வந்துறு சீடர்க் கெல்லாம் வழங்கிநல் லாத்ம ஞானம்
அந்தகன் றனக்குத் தானே யந்தக னுகுமீசன்
முந்திய வருளைப் பெற்றேன் மொழியண்ணு நாக ஞான
சுந்தர தேசிகன் றன் றுணையடி தொழுது வாழ்வாம் (12)

காசாசை முதன்மூன்றுங் கழிப்ப தற்குங்
கடப்பரிய வைங்கோசங் கடப்ப தற்கும்
பேசாத வனுபூதி பிறப்ப தற்கும்
பேதமன மிறப்பதற்கும் பெரிது மெண்ணித்
தேசாருஞ் செங்குமுதந் தேன்பொ ழிந்த
செய்கையெனச் செந்திருவாய் மலர்ந்தன் பர்க்கு
வாசாம கோசரமாம் பொருளு ணர்த்து(ம்)
மகாதேவ மூர்த்திபதம் வணங்கி வாழ்வாம் 13

கங்கையு மம்புலி யுங்கமழ் கொன்றையுங் கண்ணுதலுந்
தங்குரு வங்கர ந் திம்பர்வந் தாயெங்க டம்பிறவி
யிங்கக லும்படி நின்னருள் மாமழை யெய்திலுய்வேம்
மங்கள ஞான மகாதேவ சற்குரு மாமணியே! 14

ஐயனே யெனதுள் ளேநின் றநந்த சன்மங் களாண்ட
மெய்யனே உபதே சிக்க வெளிவந்த குருவே போற்றி
உய்யவே முத்தி நல்கும் உதவிக்கோ ருதவி நாயேன்
செய்யமா றென்றுங்காணேன் திருவடிபோற்றிபோற்றி (15)

அடியேனை யாள அருள்மேனி சாத்திப்
படிமீது வந்த பரனே—கொடியேனென்
றெண்ணு திமைப்பளவி லிங்ஙனே வீடளித்த
கண்ணு கடைபோகக் கா. (16)

---

# மாகேசுவரபூசைத் தோத்திரம்

கொண்டுவந்து மனைப்புகுந்து குலாவுபாதம் விளக்கியே
மண்டுகாதலி னாதனத்திடை வைத்தருச்சனை செய்தபின்
உண்டி நாலு விதத்திலாறு சுவைத்திறத்தினி லொப்பிலா
அண்டர்நாயகர் தொண்டரிச்சையி லமுதுசெய்ய
அளித்துளார்.(1)

மண்ணினிற் பிறந் தார்பெறும் பயன்மதி சூடும்
அண்ண லாரடி யார்தமை யமுதுசெய் வித்தல்
கண்ணி னாலவர் நல்விழாப் பொலிவுகண் டார்தல்
உண்மை யாமெனி னுலகர்முன் வருகென வுரைப்பார். (2)

அல்லார் கண்டத் தண்டர்பிரா னருளாற் பெற்ற படிக்காசு
பல்லா றியன்ற வளம்பெருகப் பரம னடியா ரானோர்கள்
எல்லாமெய்தி யுண்கவென இரண்டுபொழுதும் பறைநிகழ்த்திச்
சொல்லாற் சாற்றிச் சோறிட்டார் துயர்கூர் வறுமை
தொலைத்திட்டார்.(3)

தனிவெள்விடைமேல்நெடுவிசும்பிற்றலைவர்பூதகணநாதர்
முனிவரமரர் விஞ்சையர்கண் முதலாயுள்ளோர் போற்றிசைப்ப
இனியகறியுந் திருவமுது மமைத்தார்காண எழுந்தருளிப்
பனிவெண் டிங்கண் முடி துளங்கப் பரந்த கருணை
நோக்களித்தார்.(4)

திருச்சிற்றம்பலம்

# பகவற்கீதை

## 15-வது பிரபஞ்ச அத்தியாயம்.

## பூமிகை

ஸ்ரீ வியாசபகவான் நூறுயிரம் கிரந்தத்தில் பாரதத்தினை யியற்றினர். அதன்கண் ஸ்ரீ கிருஷ்ணபகவான் அர்ஜுன னுக்கு ஆத்ம சொரூபத்தினை அநுக்கிரகித்த பகவத்கீதை யினை 700 சுலோக ரூபமாக வைத்தனர். தமிழில் 545 செய்யுள் ரூபமாகச் சேமனூர் பட்டரவர்களால் மொழி பெயர்க்கப்பட்டது. இக்கீதையின் பெருமை 'எவன் கோரமான ஜனன மரண ரூப சம்சார சமுத்திரத்தினைத் தாண்ட விச்சிக்கின்றனனே, அவன், கீதையாகிய தோணி யின் மீது ஏறி அநாயாசமாக அதன் கரையினை யடைவன்'' ''புருஷர்களுக்குத் தினந்தோறும் ஸ்நானம் தேகத்தின் அழுக்கைப் போக்கக் காரணமாம். ஒரு முறை கீதா சாஸ்திரமாகின்ற ஜலத்தின் ஸ்நானம், ஜனனமரண ரூப சம்சார மலத்தினை நாசஞ் செய்கின்றது'' ''எவ்விடத்தில் கீதையினுடைய விசாரமும் படித்தலும் படிப்பித்தலும் நடக்கின்றதோ அந்த இடத்தில் நான் எப்போதும் வசிக்கின்றேன்''. என்று பல பிரகாரமாக வராகபுராணத் தில் கூறப்பட்டிருக்கின்றது. இதனைப் பிரதிதினமும் பாராயணஞ் செய்யாத மனுடரே இருக்கமாட்டார்கள். இதனாலே இதன் பெருமை தெளிவாகப் புலப்படு கின்றது. இதன் ஒவ்வொரு அத்தியாயத்தினை நாடோறும் பாராயணம் செய்யினும் ''பக்தியுடன் நித்தியம் ஓரத்தியாயம் படித்தவன் ருத்ர லோகத்தினை அடைந்து சிவகணமாகி நெடுநாள் வசிப்பன்''. என அதிகப்பலன் கேட்கப்படுகின்றது. வடதேயத்தில் இதன் ''புருஷோத்தம யோகம்'' என்னும் 15ஆவது அத்தியாயத்தினை பரமஹம்ச சந்நியாசிகள் போஜனத்திற்கு உட்காரும் சமயம் பாரா யணஞ்செய்து 4ஆவதுஅத்தியாயம்24ஆவதுசுலோகத்தினை

ஸ்மரித்து அர்ப்பணம் செய்து புஜிக்கின்றனர். அது போலவே தென் தேயத்தில் கோவிலூர் மடாலயத்தின் வழிவந்த பரமஹம்ச சந்நியாசிகளும், வித்தியார்த்திகளும் பகவத் வாக்கியமாகிய சமஸ்கிருத வாணி ரூப கீதையினை யும், தமிழ்வாணி ரூப கீதையினையும், போஜனத்திற்கு உட் காருஞ் சமயம் 15ஆவது அத்தியாயத்தினைப் பாராயணஞ் செய்துபுஜிக்கின்றனர். "15ஆவதுஅத்தியாயத்தின் அரைச் சுலோகத்தினைப் பாராயணஞ் செய்துகொண்டு இருந்து கௌடதேசத்தில் "சாபேருண்டன்" என்னும் அரசன் மோக்ஷமடைந்தான்" என்று பத்மபுராணங் கூறுவதால், பகவற்கீதையின் 15ஆவது அத்தியாய மாத்திரம் தனியாகச் செய்யுளாக விருக்கின் நலம் எனக் கருதி, இக் கீதையினைப் பொருட்செலவு செய்து அச்சிட்டு உதவுவதால் 'கீதையின் நூறு புத்தகத்தினைத் தானம் செய்தவன் மறுபடி மீளுதலில் லாத பிரஹ்மலோகத்தினை அடைவன்" என்று வராக புராணங் கூறுகிறது.





# பகவற்கீதை

## 15-பிரபஞ்ச அத்தியாயம்.



சாயை யன்னவென் வினைத்தளை யறுக்கவோ தகவில்
பேயை யின்னுயிர் செகுக்கவோ பிள்ளையாய் வளர்ந்தான்
வேயை யொன்றிய வரிசிலை விசயற்கு மீள
மாயை தன்னையோர் மரமாக்க வருணிக்க லுற்றான். 1

வேர்மேலது தலைகீழது வீவில்லது வேதத்
தேர்மேவிய விலைமேவிய தியாவும்புக றலினு
லார்மேவிய வசுவத்தம தெனவேயர சதனின்
பேர்மேயது பெருமாயைசெய் பிறவிப்பெரு மரமே. 2

இவ்வாறித னியல்பாகிய வகையாவெனி லியாது
மொவ்வாவகை பெரிதாகிய பிரமத்துரு விடையே
வைவாள்வலி யுழவாவரன் முறையேவரன் முறையே
மெய்வான்முதல் வருமாதலின் மேலானது வேரே. 3

ஊழால்வரு முலகாகியு முயிராகியு மெழலாற்
கீழானது தலையாவுறு முதலீறிடை கிளர்வாய்ச்
சூழாகிய பிறவித்தொட ரொருகாலமு மடையப்
பாழாம்வகை யழியாமையி லழியாத தார்படியே 4

கருநாண்முதல் வினையாலது வளர்காதல்செய் தலினு
லருநான்மறை யவையேயிலை யவையாமென வறிநீ
வருநாள்களி னொருநாள்பெறும் வகையின்மையி னுலே
பெருநாடறி யசுவத்தம தெனலாயது பெயரே. 5

மற்றிப்படி நிகழ்கின்றவிம் மாயாமர மிதனின்
பெற்றித்திற மிதுவல்லது பிறிதின்மையி னுலே
யுற்றிப்படி யுணர்வார்பொரு ளெல்லாமுமு ணர்ந்தா
ரிற்றிப்பெரு மரத்தின்றிற மின்னுஞ்சில வுளகேள். 6

கண்ணேயெனை யனையாய்பல பிறவிக்கதி வழியே
மண்ணேமுதற் கீழாமுல கிடையேவளர் வனவும்
விண்ணேமுதன் மேலாமுல கிடையேமிடை வனவு
மெண்ணேறிய பவமாகிய பணை யாலிசை தருமே. 7

நெறியால்வரு தருவேர்பல நிலமாமுல கிடையே
யறியாமையொ டுறவீழ்தலில் வேர்கீழினு முளதாம்
பிறியாதெழு குணமாகிய பெருநீர்மையில் வளரும்
பொறியாகி விவைதாந்தளிர் போன்மேயது பொலிவே. 8

கனவுந்திகழ் கழுதாழியு மிகுகந்தர்வ நகரு
மெனவந்தழி தலினுலுரு வதுவின்றியதி யாது
முனம்வந்திடு முதனுளொடு முடிவின்மையி னுலே
தனதந்தமு முதலுந்தெரி தரவில்லது தானே. 9

மந்திர மாய விந்த மரத்தினைத் துறவென் கின்ற
தந்திர வாளால் வெட்டித் தற்பர மாகி நின்றே
யிந்திரசால மென்ன யாவையுங் காட்டு கிற்கு
மந்தமி லாத வென்னை யடைகையே யடுப்ப தையா. 10

துன்னிய வாசை கோபங் கடந்தவர் காணத் தோன்று
மென்னுரு வியற்கை கேட்கி லியாவையுங் காட்டு கின்ற
மன்னிய வொளிகள் காணு வகையதாய் வந்து சேர்ந்தார்
பின்னியல் வேருென் ருகாப் பெற்றிய னென்று பேசும். 11

குடந்தொறுந் தோன்று கின்ற காயமுங் குலைதற் கேற்பத்
தடம்புன ருேறுந் தோன்றுஞ் சந்திரன் ருனு மென்ன
வுடம்புக டோறும் வேரு யுயிரென நின்றே யந்த
விடம்படு புலன்க ளாறு மியல்பினி லியற்று வேறுன். 12

பூக்கமழ் நாற்றங் கொண்டு பொருவளி போகு மாபோற்
றீக்கனல் கின்ற வேலோய் சீவனென் கின்ற சீரோ
னாக்கையை யெய்தும் போது மதனைவிட் டேகும் போதும்
போக்கரி தாயவாறு புலன்களைக் கொண்டு போமால். 13

மின்னே யனைய வுடம்பதனை விடுவ தடைவ தாய்விடயந்
தன்னே ரில்லா தான்றானே யார்கின் றானத் தன்மையினை
யென்னே காணா ரறியாதா ரறிவா ரியோகத் தாலேதம்
முன்னேகாண்பரிதனியற்கைதெளிநீயின்னுமொழிவன்கேள்

இந்தியங் களுக்குங் கண்ணா னிரவிதீ யிந்துவின்பால்
வந்தெழு கதிரு நானே மாநில மாகிநின்றே
கந்தியன் றனைய தோளாய் கந்தமே முதலாந் தன்மை
தந்துரந் தரித்தீ தெல்லாந் தாங்குகின் றேனு நானே. 15

முந்து வான்சுவை மூர்த்த மாகிய
விந்து வாகிநின் றுணவி யாவினுந்
தந்து சேர்சுவை தகப வற்றிலே
நந்தி டாவகை வளர்க்கின் றேனு நான். 16

தின்ப நக்குவ சுவைப்ப வுண்பவாய்
நன்ப யன்செயு நால்வகை யுண்டியு
மின்ப மாம்வகை யாக்கைக டோறுநின்
றன்ப வங்கியா யறுக்கின் றேனு நான். 17

நல்ல மாந்தர்நல் லறிவு நன்கிலாப்
புல்லர் தங்கள்புல் லறிவும் போர்திகழ்
வில்ல மைந்ததோள் வீரர் வீரயா
னல்ல தில்லையென் றறிய வேண்டுமே. 18

அசைவி னான்மறை யறிவ னாதன்
வசையி லாதமெய்ப் பொருளும் வாய்மைசே
ரிசையி னாலெடுத் தோது வேனுநான்
விசைய கேளினும் வேறு மொன்றையே. 19

மருவு கின்றவிவ் வுலகின் மாய்தலே
வுருவ மாகமுன் புடைய தொன்றுமே
யருவ மொன்றினு லழிவ தின்மையே
பொருவ நின்றதோர் பொருளு முண்டரோ. 20

மொழிசெய் கின்றவிவ் விரண்டு முற்றவே
விழியி னுலுற நோக்கின் மெய்ம்மையே
யழிவ தாக்கையாங் கழிவு பாடிலா
தொழிவ தென்னெனி னுயிரென் கின்றதே. 21

இவையி ரண்டையுங் கடந்தி யாதுமோர்
நவையு மின்றியே நாச மின்றியே
யெவையு மின்றியே யிழிவு மின்றியே
குவையி னின்றதோர் குறியி லின்பமே. 22

இந்த வின்பமா மென்னை யுள்ளவா
சிந்தை யின்கணே தெளிதன் மேயினர்
பந்த மொன்றிலார் பழைய விப்பொருட்
கந்த மாதிவே றறிய வொண்ணுமோ. 23

வேத நாலுநின் றுரைசெய் தாலுமோன்
ரேுத லாவதன் றுலக றிந்ததோ
காத லாலெனக் கினிய தோழனீ
யாதலாலுனக் கறிய வோதினேன். 24

கண்ணையோ ரிடத்து மின்றி யதனிலே வைக்கிற் காதற்
பண்ணையோ டாக்கு கின்ற வினையெலாம் பயக்கு மென்றான்
வெண்ணெயோ விதுரனிட்ட விருந்தையோ வேலைசூழ்ந்த
மண்ணையோ வுண்டு முன்னாள் வருபசிதீர்ந்த மாயோன். 25

பகவற்கீதையின் 15–ஆவதுபிரபஞ்ச அத்தியாயம்

முற்றிற்று

## பந்திப் பாட்டுகள்

1 அன்னம் பாலிக்குந் தில்லைச்சிற் றம்பலம்
பொன்னம் பாலிக்கு மேலுமிப் பூமிசை
என்னம் பாலிக்கு மாறுகண் டின்புற
இன்னம் பாலிக்கு மோவிப் பிறவியே.

2 தின்ப நக்குவ சுவைப்ப வுண்பவாய்
நன்ப யன்செயு நால்வகை யுண்டியும்
இன்ப மாம்வகை யாக்கைக டோறுநின்
றன்ப வங்கியா யறுக்கின் றேனு நான்.

3 துய்க்கு மவன்றான் றுய்ப்பிப்பான்
துய்க்கும் பொருடான் றுய்த்தருன்
கைக்கொள் பொருள்கொள் பவன்கொள்கை
கடவு ளருளாற் றனேயாம்
மைக்கொள் ஞான மொன்றென்று
மாறு ஞான மையமுறும்
துய்க்கு ஞான முற்றுமிறை
யருளாற் றனே யாய்த்தோன்றும்.

4 புரங்கண் மூன்றிலும் போக்கிய மியாவையங்
கிருந்து துய்ப்பவ னியாவன்மற் றியாவையும்
பரம்பி ரமமெ னும்படி பார்ப்பவன்
அரந்தை யெய்திடா னுயிரஞ் செய்யினும்.

5 உண்டிபா னங்கள் உயிரளவே யம்மானை
யோரின் மனத்தே சுகதுக்க மம்மானை
கண்டசரா மரணங் காயத்தே யம்மானை
காண்பானுக் காறான மில்லைகா ணம்மானை

முற்றிற்று.

# நிர்க்குணஷ்டோத்தர சத நாமாவளி.

| | | | |
|---|---|---|---|
| 1 | ஓம் அகண்டாய | நம: | |
| 2 | „ அகர்த்ரே | „ | |
| 3 | „ அகாமாய | „ | |
| 4 | „ அகாரணாய | „ | |
| 5 | „ அஹேயாய | „ | |
| 6 | „ அக்ரோதாய | „ | |
| 7 | „ அஸங்காய | „ | |
| 8 | „ அஸம்ஸாரிணே | „ | |
| 9 | „ அசரீரிணே | „ | |
| 10 | „ அசலாய | „ | |
| 11 | „ அச்சுதாய | „ | |
| 12 | „ அக்ஷராய | „ | |
| 13 | „ அணவே | „ | |
| 14 | „ அத்வைதாய | „ | |
| 15 | „ அநந்தாய | „ | |
| 16 | „ அநாதயே | „ | |
| 17 | „ அநாதிமுக்தாய | „ | |
| 18 | „ அநாவ்ருதய | „ | |
| 19 | „ அநுபாதேயாய | „ | |
| 20 | „ அநூதநாய | „ | |
| 21 | „ அநேகரூபாய | „ | |
| 22 | „ அபயாய | „ | |
| 23 | „ அபரிச்சிந்நாய | „ | |
| 24 | „ அபரோக்ஷாய | „ | |
| 25 | „ அபேதாய | „ | |
| 26 | „ அபோக்த்ரே | „ | |
| 27 | „ அப்ரமேயாய | „ | |
| 28 | „ அப்ரவ்ருத்தாய | „ | |
| 29 | „ அப்ராணாய | „ | |
| 30 | „ அமநஸே | „ | |
| 31 | „ அமிர்தாய | „ | |
| 32 | „ அலோபாய | „ | |
| 33 | ஓம் அவ்யாகிருதாய | நம: | |
| 34 | „ ஆதயே | „ | |
| 35 | „ ஆத்மநே | „ | |
| 36 | „ ஆநந்தரூபாய | „ | |
| 37 | „ உந்நதாய | „ | |
| 38 | „ ஏகரூபாய | „ | |
| 39 | „ காரணாய | „ | |
| 40 | „ கூடஸ்தாய | „ | |
| 41 | „ ஸத்யாய | „ | |
| 42 | „ ஸத்ரூபாய | „ | |
| 43 | „ சம்பவே | „ | |
| 44 | „ ஸர்வகாரணாய | „ | |
| 45 | „ சர்வகதாய | „ | |
| 46 | „ ஸர்வஸமாய | „ | |
| 47 | „ ஸர்வக்ஞாய | „ | |
| 48 | „ ஸர்வதோமுகாய | „ | |
| 49 | „ ஸர்வாகாராய | „ | |
| 50 | „ ஸர்வாதாராய | „ | |
| 51 | „ ஸர்வாதிஷ்டாநாய | „ | |
| 52 | „ ஸர்வாத்மநே | „ | |
| 53 | „ ஸர்வாபாவாய | „ | |
| 54 | „ ஸாக்ஷிணே | „ | |
| 55 | „ சாந்தாய | „ | |
| 56 | „ சிந்மாத்ராய | „ | |
| 57 | „ சிவாய | „ | |
| 58 | „ சுத்தாய | „ | |
| 59 | „ ஸ்வப்ரகாசாய | „ | |
| 60 | „ ஸ்வயம்ப்ரகாசாய | „ | |
| 61 | „ ஸ்வயாய | „ | |
| 62 | „ சூந்யாய | „ | |
| 63 | „ க்ஷேத்ரக்ஞாய | „ | |
| 64 | „ ஞாநஸ்வரூபாய | „ | |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 65 | ஓம் | ஸ்தாணவே | நம: | 88 | ஓம் | நிர்லேபாய | நம: |
| 66 | „ | த்ருக்ஸ்வரூபாய | „ | 89 | „ | நிர்விகல்பாய | „ |
| 67 | „ | நாநாரூபாய | „ | 90 | „ | நிர்விகாரிணே | „ |
| 68 | „ | நிஷ்கிரியாய | „ | 91 | „ | நிர்விசேஷாய | „ |
| 69 | „ | நிஷ்ப்ரகிருதயே | „ | 92 | „ | நிர்விஷயாய | „ |
| 70 | „ | நிஷ்ப்ரபஞ்சாய | „ | 93 | „ | நிர்விர்தாய | „ |
| 71 | „ | நித்யமுக்தாய | „ | 94 | „ | பரமாநந்தாய | „ |
| 72 | „ | நித்யாநந்தாய | „ | 95 | „ | பரமார்த்தாய | „ |
| 73 | „ | நித்யாய | „ | 96 | „ | பரிபூர்ணாய | „ |
| 74 | „ | நிரஞ்ஜநாய | „ | 97 | „ | ப்ரத்யக்ஸ்வரூபாய | „ |
| 75 | „ | நிரவயவாய | „ | 98 | „ | பிரத்யக்ஷாய | „ |
| 76 | „ | நிராகாராய | „ | 99 | „ | ப்ரஹ்மணே | „ |
| 77 | „ | நிராதாராய | „ | 100 | „ | புத்தாய | „ |
| 78 | „ | நிரிந்திரியாய | „ | 101 | „ | புராதநாய | „ |
| 79 | „ | நிரீசுவராய | „ | 102 | „ | மஹாதே | „ |
| 80 | „ | நிருபத்ரவாய | „ | 103 | „ | மஹாரூந்யாய | „ |
| 81 | „ | நிரூபாய | „ | 104 | „ | மனோவாசாம கோசராய | „ |
| 82 | „ | நிர்க்குணாய | „ | | | | |
| 83 | „ | நிஸ்ஸம்பந்தாய | „ | 105 | „ | முக்தாய | „ |
| 84 | „ | நிர்ஜீவாய | „ | 106 | „ | யதார்த்தவஸ்துநே | „ |
| 85 | „ | நிர்த்தோஷாய | „ | 107 | „ | வஸ்துநே | „ |
| 86 | „ | நிர்ப்பெத்தாய | „ | 108 | „ | விபவே | „ |
| 87 | „ | நிர்மலாய | „ | | | | |

ஓம் ஸ்ரீமத் அகண்ட பரிபூர்ண சச்சிதாநந்த அத்வைத ஜோதி ஸ்வரூப ஸ்ரீ தேசிக ஸ்வாமிநே

நமோ நம: நாநாவித மந்திரபுஷ்பாணி சமர்ப்பயாமி
சர்வசோடஸ உபசார பூஜாம் சமர்ப்பயாமி.

——

